ஸ்ரீ மாத்ரே நமஹ



# ஸர்வம் சிவசக்தி மயம் ஜகத்

15




நூல் எழுதியவர்:

**பரமபூஜ்யஸ்ரீ அனந்தாநந்தநாதர்**
(ப்ரஹ்மஸ்ரீ ஸி.வி. ஸ்வாமி சாஸ்த்திரிகள்)
குஹானந்தமண்டலி

நூலாக்கம்

**ஸ்ரீ அருட்சக்தி நாகராஜன்**
தலைவர் – நிறுவனர் ருதம்பரா ஞான ஸபா, புதுடில்லி





வெளியீடு :

**ஸ்ரீமத் ப்ரணவானந்த ஸரஸ்வதி அவதூத ஸ்வாமிகள்**
ஸ்ரீவித்யா மஹா ஸௌபாக்ய பராம்பிகா அறக்கட்டளை
260/ஏ, கிரிவலப்பாதை, அய்யர்மலை, சிவாயம் அஞ்சல், குளித்தலை–639120
கைபேசி : 94432 33126 / 98945 84175

Sivasakthi Mayam Jagadh
First Edition 2011

Copies:



Author:
Brahmasri C.V.Swami Sastrigal
(Sri Ananthanantha Nathar)
Guhananda Mandali

Publisher:
Poojyasri Pranavananda Avadhutha Saraswathi swamigal
Srividhya Mahasowbakya Parambika Trust,
260A, Girivalam Road, Ayyarmalai,
Sivayam Post, KULITTALAI 638120
Mobile: 9443233126, 9894584175

உ

ஸ்ரீகுருப்யோ நம:

நூன்முகம்:

உலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளும் அதாவது மனிதன் முதல் புழுபூச்சி வரை மஹாசக்தியால் படைக்கப்பட்டது. அந்த சக்திதான் சிவசக்தி என்றபடி விரிந்துள்ளது என்பர். அதனை ஸர்வம் சிவசக்திமயம் ஜகத் என்ற வியாஸங்களாக எங்கள் ஸத்குருநாதரான பூஜ்யஸ்ரீ அனந்தாநந்தநாதர் (ப்ரஹ்மஸ்ரீ ஸ்வாமி சாஸ்த்திரிகள்) அவர்கள் எழுதி பல ஆண்டுகளுக்கு முன்பு அருட்சக்தியிடம் கையெழுத்துப்ரதியாக கொடுத்திருந்தார்கள். அதில் நாம் அன்றாடம் அனுபவிப்பதில் உள்ள விஷயங்களின் தத்துவங்களை சிவசக்தி மயமாக கண்டிருக்கிறார்கள். அந்த வியாஸங்களை தொகுத்து நூலாக்கி வைத்திருந்தேன். அதனை படித்துப்பார்த்த பரமபூஜ்யஸ்ரீ பிரணவானந்த அவதூத ஸரஸ்வதி ஸ்வாமிகள் மனமுவந்து ஸ்ரீவித்யா மஹாஸௌபாக்ய பராம்பிகா டிரஸ்ட் மூலம் அதனை அச்சிட்டு சென்னை, நங்கநல்லூரில் நடைபெறும் 13 வது நக்ஷத்திரமண்டல மஹாசண்டி யாகத்தில் வெளியிடுகிறார்கள். ஸ்ரீஸ்ரீஸ்வாமிகள் உலகின் பல பாகங்களில் இதுபோன்ற நக்ஷத்திர மண்டலமஹாசண்டியாகங்களை 108 இடங்களில் நடத்த திருவுளம் கொண்டுள்ளார்கள். அதற்கு அன்பர்களும், செல்வர்களும் மனமுவந்து ஒத்துழைத்தால் அந்த பொதுநோக்கத்துடன் செய்யப் பெறும் யாகம் குறைவில்லாமல் நடக்கும் என்பதை இந்த நேரத்தில் சொல்வதில் பெருமையடைகிறேன். அவர்களுக்கு மிக நன்றி சொல்வதுடன் நமது மனப்பூர்வமான நமஸ்காரங்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

நன்றியுடன்,
அருட்சக்தி நாகராஜன்
ருதம்பரா ஞான ஸபா
புதுடில்லி

05-04-2011
வஸந்த நவராத்திரி

உ

# ஸர்வம் சிவ சக்தி மயம் ஜகத்

## உலகில் எல்லாமும் சிவசக்திமயமே

எழுதியவர்:

**ப்ரஹ்மஶ்ரீ ஸி.வி. ஸ்வாமி சாஸ்த்திரிகள்**

(பூஜ்யஶ்ரீ அனந்தாநந்தநாதர்)



சராசராத்மகமான இந்த ப்ரபஞ்சம் **சிவசக்தி** மயமாகத்தான் இருக்கிறது சிவமின்றி சக்தியில்லை. சக்தியின்றி சிவமில்லை. இந்த இரண்டையும் பிரிக்க முடியாது. ஸூர்யனும் ஒளியும் போலவும் சந்த்ரனும் குளிர்ச்சியும் போலவும் இந்த சிவசக்திகள் பிரிக்கமுடியாத நிலையில் உள்ளன. சராசராத்மகமான இந்த ப்ரபஞ்சம் சிவசக்தி மயமாகத்தான் விளங்குகிறது- என்ற ஞானம்தான் நமக்கு ஏற்பட வேண்டும். காணும் எல்லாவற்றையும் சிவசக்தி மயமாக பார்ப்பதுதான் உண்மையான ஞானம். இந்த ஞானத்தை த்தான் ப்ரஹ்ம ஞானம் என்று அனுபவம் வாய்ந்த பெரியோர்கள் கூறுகிறார்கள். **இதுதான் முக்திக்குக் காரணம். இந்த ஞானம் த்ருடமாகி விட்டால் பிறப்பும் இறப்பும் இல்லை.** இந்த ஞானம் ஏற்படுவதற்கு அனுபவம் வாய்ந்த பெரியோர்கள் நமக்கு அனேக வழிகளை சுலபமாக காட்டியிருக்கிறார்கள். நித்யமாக நாம் செய்யும் கல்யாணம் முதலிய விசேஷங்களிலும், பூஜை முதலானதுகளிலும் சிவசக்தி மயமான ஞானம் ஏற்படு வதற்கு அனேக வழிகளை முதிர்ந்த ஞானிகள் காட்டி இருக்கிறார்கள். ஒவ்வொன்றாக பார்ப்போம்.

# 1. பூஜைக்கு இரண்டு விளக்குகள் எதற்கு?



முதலில் நாம் செய்யும் பூஜையில் நெய்த்தீபம், நல்லெண்ணெய் தீபம் இரண்டும் வைக்க வேணுமென்று சாஸ்த்திரங்கள் கூறுகின்றன. நாம் பூஜை செய்யும் மூர்த்திக்கு இடது பக்கத்தில் நல்லெண்ணெய் தீபமும், வலது பக்கத்தில் நெய்த்தீபமும் வைக்கவேணுமென்பது விதி. இந்த இரு தீபங்களும் சிவசக்திகளைத்தான் குறிப்பிடுகின்றன. இந்த சிவசக்திகள் அர்த்தநாரீச்வர ஸ்வரூபமாக இருப்பதால்தான் பிரிக்க முடியாதவை என்று சாஸ்த்திரங்கள் கூறுகின்றன. அர்த்தநாரீச்வர ஸ்வரூபத்தின் வலதுபக்கம் சிவம். இடது பக்கம் சக்தி.



**இடதுபக்கம் -நல்லெண்ணெய் தீபம் = சக்தி,**
**வலதுபக்கம் நெய்த்தீபம் = சிவம்-** அதுவும் நல்லெண்ணெய் தீபத்துக்கு சிவப்பு நிறமான திரியும், நெய்த்தீபத்துக்கு வெண்மை நிறமான திரியும் தான் இருக்கவேணுமென்று கூறப்படுகிறது. ஏனெனில் சிவத்தின் நிறம் வெள்ளை என்றும், சக்தியின் நிறம் சிவப்பு என்றும் சாஸ்த்திரங்கள் கூறுகின்றன.

எள் நெய் என்பதுதான் எண்ணெய். எள்ளிற்கு பெயர் வடமொழியில் **திலம்** என்பது. திலம் என்ருல் கடபயாதி ஸங்க்யா ரீதியாக 36 என்ற எண். அதாவது **தி=6, லம்=3.** அக்ஷரங்கள் ஸங்க்யா ரூபமாக கணக்கிடும்போது இடமிருந்து வலமாகத்தான் கணக்கிட வேணுமென்று ஸங்க்யா சாஸ்த்திரம் சொல்கிறது. இந்த 36 என்ற எண் தத்வங்களைக் குறிக்கின்றது. தத்வங்கள்

என்றால் பூமி முதல் சிவம் ஈறான 36 ஐத்தான் குறிக்கும். இங்குகூறும் சிவசக்திகள் இந்த 36 தத்துவங்களுக்கும் அதீதமானது. இந்த தத்துவங்களை ஊடுருவி சிவசக்திகள் இருக்கின்றன். சிலசமயம் சிவம், சில சமயம் சக்தி என ப்ரதானமாக தோன்றினாலும் இவை இரண்டும் ஸம ப்ரதானங்களாயும், ஸம ஸத்வங்களாயும் இருந்தாலும் சக்திதான் ப்ரபஞ்சத்துக்கு காரணமாக இருக்கிறது - என உபநிஷதம் கூறுகிறது. இந்த சக்தி ஞானம் லேசில் ஏற்படாது. எள்ளை செக்கில் இட்டு நன்றாக ஆட்டினால்தான் எண்ணெய் வரும். இதுபோல் தத்வாத்மகமான ப்ரபஞ்சத்தை குருவின் அருளால் நன்றாக ஊடுருவி பார்த்தால்தான் (தத்வசோதனம்) சக்திஞானம் ஏற்படும். இந்த சக்தியானது சலன ஸ்வபாவத்தோடும், சிவப்பு வர்ணத்தோடும் கூடியது. நல்லெண்ணெயும் சலன ஸ்வபாவத்தோடும், சிவப்பு வர்ணத்தோடும் கூடியது. மற்ற எண்ணெய்களை யெல்லாம் எண்ணெய் என்று தான் கூறுவது வழக்கம்.இதனால்தான் இந்த தீப எண்ணெயை நல்லெண்ணெ என்று கூறுவதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

வலது பக்கம் வைக்கும் நெய்யின் நிறம் வெள்ளை. இது சிவத்தைக் குறிக்கிறது. இந்த நெய்க்கு வடமொழியில் **ஆஜ்யம் - ஆயு: க்ருதம்** - என்றெல்லாம் கூறுவார்கள். ஆஜ்யம் என்றாலும் ஆயு: என்றாலும் 10 என்ற எண்ணைக் குறிக்கும். இந்த 10 என்ற எண் அக்னி கலைகளை குறிக்கும். அக்னி எவ்விதம் எல்லாவற்றையும் எரித்து சாம்பலாக்குமோ அவ்விதமே ஆஜ்யம் என்னும் சிவமும் எல்லாவற்றையும் சாம்பலாக்கிவிடும். இந்த சிவத்திற்கு ஞானம் என்று பெயரானதால்தான் அது சிவஞானம். அம்பாளுக்கு **சிவஞானப்ரதாயினி** என்று

பெயர். இதை மனதில் வைத்துக்கொண்டு கீதாசார்யனும்- **ஞானாக்னி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே அர்ஜுன** -என்று கூறியிருக்கிறார்.

**ஞானம்** என்றால் கடபயாதி ஸங்க்யா ரீதியாக இரண்டு பூஜ்யங்கள்(00). ஞான பதத்திற்கு எண்கள் இல்லை. இந்த நெய் விவகார தசையில் பாலிலிருந்துதான் தோன்றுகிறது. சிவஞானம் ஏற்பட வேணுமானால் மனம் ஸத்வ குண பூர்ணமாக இருக்கவேணும். ஸத்வகுணத்தின் நிறம் வெள்ளை. பசுவிலிருந்து ஸத்வ குணமாகின்ற பாலை கறந்து எடுக்க வேண்டும். பாலை நன்ருகக் சுண்டக் காய்ச்சுவதுபோல ஸத்வகுணத்தையும் தவத்தினால் சூடேற்ற வேண்டும். சூடேற்றின பாலை ஆறவைத்து அதில் பிரை ஊற்றினால் அது தயிராகும். அந்த தயிரை நன்ருக கடைந்தால் வெண்ணெய் வரும். வெண்ணெய் என்ருல் வெண்மை நிறத்துடன் கூடின நெய் என்று பொருள். இதற்கு நவநீதம் என்றும் பெயர். நவநீதம் என்ருல் புதிதாகக் கொண்டு வந்தது என்று பொருள். உருவம் இல்லாத சிவத்திற்கு புதிதாக உருவம் தருவதைத்தான் நவநீதம் என்ற பதம் குறிப்பிடுகிறது. வெண்ணெயை நன்ருகக்காய்ச்சினால் அது நெய்யாகிறது. அதுபோல் உபாஸன மூர்த்தியே தபஸ்ஸினுலும் த்ருட வைராக்யத்தினுலும் உருவம் கரைந்து சிவமாகி விடுகிறது. ஸத்துவகுணம் உருமாறி தவத்தினுல் உபாஸன மூர்த்தியின் உருவத்தை தரித்து அதுவும் கரைந்து சிவமாகி விடுகிறது. சிவமானுல் அதுதான் எல்லை. அதற்கு வேறு உருவம் கிடையாது. பாலும் தயிராகி - அதுவும் வெண்ணெயாகி - பின் நெய்யாகி விடுகிறது. அதன்பின் நெய்க்கு வேறு பரிணாமம் இல்லை. அது சில சமயம் கட்டியாகவும் சில

சமயம் கரைந்தும் காணப்படும் என்ருலும் வேறு பரிணமத்தை அடையாது. கேரளத்தில் இருக்கும் திருச்சூர் ஆலயத்தில் சிவனுக்கு அபிஷேகம் செய்யும் நெய்யைத்தான் பார்க்கலாம். அங்கு சிவனை தரிசனம் செய்ய முடியாது. அதனால்தான் நெய்யைச் சிவமாகப் பெரியோர்கள் கூறுகிறார்கள். இந்த நெய்த்தீபத்தை வெள்ளைத்திரியுடன் நாம் பூஜை செய்யும் போது உபாஸன மூர்த்திக்கு வலது பக்கம் வைக்க வேணு மென்றும் எண்ணெய்த் தீபத்தை சிவப்பு திரியுடன் உபாஸன மூர்த்திக்கு இடது பக்கம் வைக்கவேணு மென்றும் சாஸ்த்திரங்கள் கூறுகின்றன. இந்த தீபங்கள் நமக்கு சிவசக்தி ஞானத்தை நன்ருகவே உணர்த்து கின்றன.

## 2. பூஜைக்கு இருவகை சந்தனம் ஏன்?

பூஜைக்கு சந்தனம் தேவையல்லவா! அதற்கு ரக்த சந்தனம் சக்திக்கும், வெள்ளை சந்தனம் சிவத்திற்கும் உபயோகப் படுத்துகிருேம்.மேலும் வெள்ளை சந்தனத்தில் பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ இவைகளை அறைத்து சேர்க்கிருேம்.இதில் **பச்சைக் கற்பூரம் = சிவம், குங்குமப்பூ = சக்தி.** சிவம் எல்லையற்ற ஸமுத்திரம் போன்றது. இந்த சிவத்தை சக்தியால்தான் கட்டுப்படுத்த முடியும்.

## 3. சிவத்தைக் கட்டுப்படுத்தும் சக்தி

ஸமுத்திரத்தில் கப்பலை நிறுத்த முடியாது.

ஆனால் கப்பலை நிறுத்துவதற்காக ஸமுத்திரத்திலேயே ஒரு இடத்தைக் கட்டியிருக்கிறார்கள். அதற்கு பெயர்தான துறைமுகம். இந்தமாதிரி கட்டுப்படுத்தின நீர்நிலையில் தான் கப்பலை நிறுத்த முடியும். அதுபோல் சக்தியால் கட்டுபடுத்தப் பட்டதற்குத்தான் சிவம் என்று பெயர். (வியவகார தசையில்) சக்திதான் முக்கியம் என்பதை காட்டுவதுபோல் சர்க்கார் கட்டிடங்களும் சிவப்பு நிறத்தில்தான் இருப்பதைக் காணலாம். கரையில்லாத வேஷ்டியை கட்டிக்கொள்ளக் கூடாது என சாஸ்த்திரம் சொல்கிறது. வெள்ளை நிற வேஷ்டிக்கு ஏதோ வர்ணத்தில் கரை இருப்பதை நாம் கண்கூடாக காண்கிறோம். நம் வீடுகளில் விசேஷ காலங்களில் மாவை அறைத்து இழை கோலம் போட்டு சுற்றி காவியினால் கரை கட்டுவார்கள். மேலும் ஸங்கராந்தி சமயங்களில் வீடுகள், ஆலயங்கள், திருக்குளப் படித்துறை ஆகிய இடங்களில் சிவப்பு-வெள்ளை பட்டையடித்து அலங்காரம் செய்வார்கள். இவையெ ல்லாம் ப்ரபஞ்சம் சிவசக்தி மயமானது என்றும், இத்தகைய சிவசக்தி ஞானம் நமக்கு ஏற்படவேணு மென்று முன் சொன்ன விதமெல்லாம் காட்டிக் கொடு த்துள்ளார்கள்.

## 4. மேனையின் புதல்வி உமா

**ஸர்வம் வ்யக்த உமாரூபம் அவ்யக்தம் து மஹேச்வர:** -என்று ஸூதஸம்ஹிதை கூறுகின்றது. நன்றாக வெளிப்படையாக தெரிவதெல்லாம் சக்தி என்றும், அவ்யக்தமாக- உள் மறைவாக இருப்பதெல்லாம் சிவம் என்றும் அர்த்தம். இதில் **உமா** என்ற பதத்தை சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

அம்பாள் சிவபெருமானை பர்த்தாவாக அடைவதற்கு தவம் செய்த போது தாயான மேனையானவள் சொன்னாள் - **உ= அழகானவளே, மா= வேண்டாம்** -என்று. அழகான உடலை தவத்தால் வருத்திக் கொள்ளாதே என்று கூறினாள். அதனால் அவளுக்கு உமா என்று பெயர் வந்ததாக கவி காளிதாஸன் கூறுகிறார். இந்த அர்த்தம் மிக சாதாரணமானது தான். மஹான் ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர் அவர்கள் -
**ஓமித்யுமேதி யுவயோ: அபிதானமேகம்** - என்று **(ஓம்- இதி -உமா-இதி)** கூறுகிறார்கள். அதாவது பிரிக்க முடியாத சிவசக்திகளைப் பார்த்து இவ்விதம் கூறுகிறார்கள். சிவம் என்று குறிப்பிடும் ப்ரஹ்மத்துக்கும் -**தஸ்ய வாசக: ப்ரணவ:** -என்னும் சாஸ்த்திர ரீதியாக **ஓம்** என்ற ப்ரணவ பதத்தாலும், ப்ரஹ்ம சக்தியை **உமா** என்னும் பதத்தாலும் குறிப்பிடுகிறார். அகார உகார மகாரங்கள் ப்ரணவத்தின் பிரிவுகள். இதில் முன்னால் வரும் அகாரத்தை பின்னால் சேர்த்தால் அதாவது உகார மகார அகாரமாக கூறினால் **உமா** என்றுதானே வரும். இதுதான் ப்ரஹ்ம சக்தி. இந்த ப்ரஹ்ம சக்தியை ஜடங்களான மேனையும் ஹிமவானும் ஈன்றெடுத்தார்கள் -என்று சொல்வது கொஞ்சம்கூட பொருத்தமாக இல்லை. எவ்விதம் கூறினால் பொருத்தமாக இருக்கும் என ஆராய்ந்து பார்ப்போம்.

**ஹி நிச்சயேன மா மாயா லயம் ப்ராப்னோதியதாஸ: ।**
**ஹிமாலய இதி ப்ரோக்த: ஸ்வானுபூத்வா மஹாத்மபி ॥**
-அதாவது தீர்மானமாக மாயையானது எந்த இடத்தில் லயித்து இருக்கிறதோ அதுதான் ஹிமாலயம் என்று ஸ்வானுபூதி பெற்ற மஹான்கள் கூறுகிறார்கள். இந்த அர்த்தத்தை மனதில் வைத்துக்கொண்டுதான் கவி

ச்ரேஷ்டனும் அம்பாள் அனுக்ரஹத்தை பரிபூர்ணமாகப் பெற்றவனும் இருக்கும் காளிதாஸன் தன் குமார ஸம்பவத்தின் முதல் ஸ்லோகத்தில் -

**அஸ்தியுத்தரஸ்யாம திசி தேவதாத்மா -**
**ஹிமாலயோ நாம நகாதிராஜ ஹிமாலய**

-என்று கூறினதாகத் தோன்றுகிறது. இதுபோல் -

**மேனேதி நிச்சிதா புத்தி மேனேத்யேவம் ப்ரகீர்த்யதே**

-தீர்மானமாக என்னுடையது இல்லை என்று சொல்வது எந்த புத்தியோ அதுதான் **மேன:** (மேனே). அதாவது அஹங்கார மமகாரங்கள் அற்றதான இடதில்தான் ப்ரஹ்மசக்தியின் ஆவிர்பாவம் ஏற்படும்.

இதுதவிர கேனோபநிஷத் கூறுகின்றது. -

**உமாம் ஹைமவதீம் பஹுசோபமானும்** -என்று. அதாவது ஒரு சமயம் தேவர்களுக்குள் நான் தான் பெரியவன் என்ற அமர்களம் ஏற்பட, அந்த சங்கடத்தை ஒழிப்பதற்காக அம்பாள் யக்ஷ உருவத்தை எடுத்து, அக்னி வாயு சந்த்ரன் இவர்களின் அஹங்காரத்தை அழித்தாள். இந்திரன் வந்தபோது மறைந்து விட்டாள். அப்போது இந்திரனும் அஹங்காரமற்று தாயை நினைத்துக் கதற, தாயும் 10,000 ஆண்டு தவம்செய் என்றுகூற, இந்திரனும் அதுபோல் தவமியற்றினன். பின்பு தாயும் தவத்திற்கிரங்கி தர்சனம் கொடுத்தாள். இங்குதான் கேனோபநிஷத் கூறுகின்றது - **உமாம் ஹைமவதீம் பஹுசோபமானும்** -என்று. என்னால் உலகம் படைக்கப்பட்டும் காக்கப்பட்டும் வருகிறது. எனவே நீங்கள் யாரும் கர்வம் அடைய வேண்டாம் - என்றுகூறி தேவர்களை அனுக்கிரஹம் செய்தாள். இந்த சரித்திரம்தான் கேனோபநிஷத்தில் விஸ்தாரமாக கூறப்படுகின்றது.

மேலும் உமா என்றால் கடபயாதி ஸங்க்யா ரீதியாக 50. இந்த 50 என்ற எண்ணும் அக்ஷரங்களை குறிப்பிடுகின்றது. அக்ஷரங்கள் என்றால் நாசமில்லாதவை என்று அர்த்தம். நாசமில்லாதது ப்ரஹ்மம் ஒன்றுதான். இதனைத்தான் **-கெட்டுப்போன ப்ரஹ்மத்தை கேனோபநிஷதத்தில் தேடு** -என்று பெரியோர்கள் கூறுவார்கள்.

## 5. சிவ - சக்தி ஒன்றே

மஹானுன ஸ்ரீதர அய்யாவாளும் சிவசக்தி மயமான ஞானம் ஏற்பட்டால்தான் அக்ஞானம் விலகி ஞானம் ஏற்படும் என்று கூறுகிறார்கள்.

*சிவநாமானி பாவிதேவுந்தரங்கே*
*மஹதி ஜ்யோதிஷி மானினீ மயார்த்தே।*
*துரிதான்ய பயாந்தி தூரதூரே முஹுராயாந்தி*
*மஹாந்தி மங்களானி ॥*

அதாவது பாதிஸ்த்ரீ ஸ்வரூபமாகவும், சிவ என்ற பெயருடன் கூடினதாயும் இருக்கும் மஹாப்ரகாசத்தை அந்தரங்கத்தில் பாவித்தோமானால் பாபங்கள் மிக தூரத்தில் சென்றுவிடும். மங்களங்கள் நம்மை தேடிக்கொண்டு வரும் என்று கூறுகிறார்கள். இதில் ஸ்தூலமாக **மானினீ மயார்த்தே** என்று அர்த்தநாரீ ஸ்வரூபத்தை அதாவது சிவசக்திகளை கூறி, ஸூக்ஷ்மமாக **சிவநாமானி** என்று கூறினார். சிவ என்ற பதத்தில் வரும் **-சி-** என்ற சிகாரம் மங்களம். **-வ-** என்ற வகாரம் அம்ருதம். எனவே சிவ என்ற பதம் மங்களமாயும் அம்ருதமாயும் உள்ளது. **சம்** என்றால் ம்ருத்யு என்று பீஜநிகண்டு கூறுகிறது. **சம் ம்ருத்யவே நம:** என்றால் அம்ருதம். அதாவது ம்ருத்யு பயத்தைப் போக்கி அம்ருதமயமான நிலையைக் கொடுக்கிறது என்ற

அர்த்தமேற்படுகிறது. **ஸ்ரீசக்ரம் சிவயோர் வபு:** -என்று தந்த்ரங்கள் கூறுகின்றன. இது ஸூக்ஷமமாக சிவசக்தி ஸ்வரூபத்தைக் குறிக்கின்றது. மேலும் ஸ்ரீசக்ர ஆராதனத்தையும் குறிப்பிடுகின்றது. ஏனென்றால் - **மோக்ஷைக ஹேதுகா வித்யா ஸ்ரீவித்யைவ ந ஸம்சய:** அதாவது மோக்ஷத்திற்கு ஒரே காரணமாக இருப்பது ஸ்ரீவித்யைதான். ஸந்தேஹமேயில்லை என்று தந்த்ரங்கள் கூறுகின்றன.

ஸ்ரீவித்யா என்றால் கடபயாதி ஸங்க்யா ரீதியாக 142. இந்த 142 என்ற எண்களில் வரும் 42 என்ற எண்ணோடு முதலில் உள்ள 1 ஐ சேர்த்தால் 43 என்று வருகிறதல்லவா! இது 43 முக்கோணமான ஸ்ரீசக்ரத்தைத்தான் குறிக்கின்றது. மேலும் முதலில் உள்ள 14 என்ற எண்ணோடு கடைசி 2 ஐ சேர்த்தால் 16 அல்லவா! இது ஸ்ரீசக்ர அதிஷ்டாத்ரியான ஷோடசி வித்யையைக் குறிக்கின்றது. சிவசக்தி மயமாயும் ஸ்ரீசக்ர அதிஷ்டாத்ரியாயும் உள்ள ஷோடசி வித்யைக்கு லக்ஷயமான மஹாப்ரகாசத்தை தனக்கபேதமாக பாவித்தால் ஜன்மாவிற்கு ஹேதுக்களான கர்மவாஸனைகள் மிகதூரச் சென்றுவிடும். என்றும் ஸ்ரீஅய்யாவாள் கூறுகிறார்.

## 6. சிவப்பும் - வெள்ளையும்



உலகில் உள்ளவர்களுக்கு இந்த சிவசக்தி அபேதஞானம் ஏற்படவேண்டும் என்பதற்காக சைவர்கள் விபூதி குங்குமத்தையும், வைஷ்ணவர்கள் திருமண் ஸ்ரீசூர்ணத்தையும் மதச்சின்னமாக



நெற்றியில் தரிக்க வேண்டுமென பெரியோர்கள் கூறியிருக்கின்றார்கள்.

உலகில் காணும் வஸ்துக்களை எரித்தால் கடைசியில் எரிந்த வஸ்துக்கள் வெண்மை நிறமான சாம்பலாகிவிடும்.

இந்த வெண்மை நிறம் சிவத்தையும் சிவப்பு நிறமான குங்குமம் சக்தியையும் குறிப்பிடுகின்றது. வைஷ்ணவர்கள் நெற்றியில் இரண்டு கோடுகளாக திருமண்ணையும் அதற்கு நடுவில் சிவப்பு நிறமான ஸ்ரீசூர்ணத்தையும்தரிக்கின்றார்கள். இதுவும் சிவசக்தி களைத்தான் குறிப்பிடுகின்றது. விபூதி என்பது சாம்பல் கடைசியில் இச்சரீரமானது சாம்பலாகத்தான் போகும். அதற்குள்ளாக சிவசக்தியைக்யரூபமான ஞானத்தை அடைய வேண்டும் என்பதை ஞாபகப்படுத்துகின்றது. அதுபோல் திருமண் கடைசியில் இச்சரீரமானது மண்ணோடு மண்ணாகத்தான் போகும். அதற்குள்ளாக சிவசக்தியைக்யரூபமான ஞானத்தை அடைய வேண்டும் என்பதை ஞாபகப்படுத்துகின்றது.

சுபகார்யங்களில் குங்குமம் அல்லது மஞ்சள் கலந்த அக்ஷதை இவைகளை பெரியோர்கள் உபயோகப்படுத்துகிறார்கள். இதில் குங்குமம்,மஞ்சள் = சக்தி, அக்ஷதை =சிவம். அக்ஷதை என்றால் க்ஷதம் இல்லாதது. (முறிவில்லாதது) முழுமையாக இருக்கக்கூடியது. பூஜா காலங்களில் அத்வைதிகள் சுத்தாக்ஷதையைதான் உபயோகிப்பார்கள். இது ஸதா சிவத்தில் நாட்டத்துடன் இருக்கவேண்டும் என்பதையும் சிவம் பூர்ணம் என்பதையும் காட்டுகிறது. பித்ரு காரியங்களில் சிவப்பு எள்ளும் வெள்ளை அக்ஷதையும் கலந்து உபயோகம். பித்ரு காரியங்களில் சில

பெரியோர்கள் இவைகளை கலந்துதான் உபயோகிக்கிறார்கள். ஸ்ரீவேங்கடாசலபதி ஸமாராதனையில் தீபாராதனம் செய்யும்போது சிலர் திலத்தையும் அக்ஷதையையும் ஸமமாகக் கலந்து துணியில் கட்டி அதை நெய் தீபத்தில் வர்த்தியாக (திரியாக) உபயோகிக்கிறார்கள்.

**அவன் சாயம் வெளுத்துவிட்டது**- என்று உலகில் கூறுவார்கள். இதன் கருத்தாவது: சிவன் சக்தி இரண்டும் பிரிக்கமுடியாதது என்பதை மாயா ப்ராந்தியால் சிவம் வேறு சக்தி வேறு என்று நினைத்துக்கொண்டு உபாஸ்தி செய்து; இறுதியில் உண்மையான ஞானம் ஏற்பட்டு ; மாயாப்ராந்தி நீங்கி எல்லா வ்யவகாரங்களும் அற்று; ஸ்ரீஸதாசிவ ப்ரஹ்மேந்திராள் போன்ற மஹான்களைப்போல் ஒத்தநிலை ஏற்படும்போது சிவமாக விளங்குவதைத்தான் சாயம் வெளுத்துவிட்டது- என்று கூறுவது.

கல்யாணங்களில் காலில் நலுங்கு இடுவதற்கு சுண்ணாம்பு மஞ்சள் இவைகளை கலந்துதான் இடுவார்கள். இது சிவப்பாகி விடுகிறதல்லவா! இதை திருஷ்டி கழிக்கவும் ஹாரத்தியாக சுற்றுவார்கள்.

## 7. ரத்ன த்ரயம்

மஹான் ஸ்ரீஅப்பைய தீக்ஷிதர் அவர்களும் ரத்னத்ரய பரீக்ஷை என்று ஓர் க்ரந்தத்தை அருளியுள்ளார்கள். ரத்னத்ரயம் என்று சிவம் சக்தி விஷ்ணு என்று மூன்று ரத்னங்களைக் குறிப்பிடுகிறார். சிவத்திற்கு இடது பாகம் அம்பாள். அர்த்தநாரீச்வர ஸ்வரூபம். பார்வதி பரமேஸ்வரர்களாக கூறுகின்றோம்.

சிவத்திற்கு இடது பாகம் விஷ்ணுவாகக் கூறும்போது சங்கரநாராயணன் என்று கூறுகின்றோம்.

இம்மூன்று மூர்த்திகளும் ஒன்றாகத்தான் இருக்கின்றனர். இம்மூர்த்திகளைப் பிரிக்க முடியாது. இந்த விஷயத்தை மனத்தில் வைத்துக்கொண்டுதான் கவிச்ரேஷ்டனான காளிதாஸனும் தன்னால் இயற்றப்பட்ட ரகுவம்ச காவியத்தின் முதல் ஸ்லோகத்தில்

*வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ வாகர்த்த ப்ரதி பத்தயே*
*ஜகத:பிதரௌ வந்தே பார்வதீச ரமேச்வரௌ*

-என்கிறார். பார்வதி பரமேச்வரர்கள் -பார்வதீசன் ரமேச்வரன் இவ்விதம் இருப்பவர்களை வணங்குகிறேன் என்று கூறுகின்றான்.

**(பார்வதீசன் - சிவன் ரமேசன் - விஷ்ணு)**

இந்த சிவன், அம்பாள், ஸூர்யன், விஷ்ணு, கணபதி இவர்களே பஞ்சாயதன தேவதைகள் என கூறுவர். இந்த பஞ்சாயதன தேவதைகளைத்தான் அத்வைதிகள் அத்வைத ஞானம் ஏற்பட பூஜை செய்யவேணுமென்று தர்மசாஸ்த்திரம் கூறுகிறது. இந்த பஞ்சாயதன தேவதைகள்தான் பஞ்சபூதங்களை ஏற்படுத்துகின்றன.

*சிவ: கம், அனில: சக்தி, ரவிரக்னி, ஜலம் ஹரி:, மஹீ கணேச:*

*ஸம்ப்ரோக்த: விச்வமேதன்மயம் ॥*

சிவம் ஆகாயம், சக்தி வாயு, ஸூர்யன் அக்னி, ஹரி ஜலம் , கணேசன் பூமி. இதில் சிவன், ஜலம் , விஷ்ணு இந்த மூன்றும் ஒன்று. ***த்யேயஸ் ஸதாஸவித்ரு மண்டல மத்யவர்த்தி ஸௌரமண்டல மத்யஸ்த்தம் சாம்பம் ஸம்ஸாரபேஷஜம் ।*** என்னும் ப்ரமாணத்தால் ஸூர்யன்

சிவவிஷ்ணுவாத்மகன். அம்பாளின் நிறம் சிவப்பு. பாசம் அங்குசம் இரண்டு ஆயுதங்கள். கணபத்யுபநிஷதத்தில் கணபதியும் சிவப்பு நிறம் பாசம் அங்குசங்களை தரித்தவர் என்று உள்ளது. ஆகையால் கணபதி தேவ்யாத்மகன்.

இதன்றியும் ஸப்தரிஷிகளில் ஒருவரான மரீசி மஹரிஷி திருப்பதி ஸ்ரீவேங்கடாசலபதியை துதிக்கின்றபோது -

***காதிஹ்ரீமந்த்ர வித்யாம்யா ஸம்ப்ராப்ய பரதேவதா।***
***கலௌ ஸ்ரீவேங்கடேசாக்யா பாதிதாம் ஹ்ருதயே பஜே***



-என்கிருர். **க** என்ற அக்ஷரத்தை முதலிலும் **ஹ்ரீம்** என்பதை கடைசியாயும் உடைய பரதேவதை கலிகாலத்தில் வேங்கடேசன் என்ற பேருடன் விளங்குகிருர். அவரை நான் ஹ்ருதயத்தில் பஜிக்கிறேன் என்று கூறுகிருர்.

***யதேகாதசமாதாரம் பீஜம் கோணத்ரயோத்பவம்।***
***ப்ருஹ்மாண்டாதி கடாஹாந்தம் ஜகதத்யாபி த்ருச்யதே*** -

முக்கோணத்திலிருந்து உண்டானதான 11 வது ஸ்வரம் ப்ரஹ்மாண்டம் முதல் கடாஹம் வரையிலான ஜகத்தாக காணப்படுகிறது. அதாவது ஏ என்ருல் **அ+ஈ** சேர்ந்தது. இதில் **அ = சிவம், ஈ = சக்தி** என்று ஸ்ரீதேவி ஸ்வரூபாளான ஸ்ரீபாஸ்கரராயர் அவர்கள் கூறுகிறார்கள்.

ரத்னத்ரய பரீக்ஷை என்னும் க்ரந்தத்தில் மூன்று ரத்னங்களாக கூறும் மூன்று மூர்த்திகள் வெவ்வேறாகத் தோன்றினுலும் ஒன்றேதான். பிரிக்கமுடியாதவை. இந்த மூர்த்திகளை முற்றும் துறந்த ஸன்யாசிகள் பானம் ஒன்றேதான் கதி என்று இருப்பவர்கள்- மனதில் சிச்சக்தியான அம்பாளை தனக்கபேதமாக பாவனை

செய்கிருர்கள். அவர்கள் விபூதி ருத்ராக்ஷம் முதலான சிவ சின்னங்களை அணிகிருர்கள். யாராவது தங்களை வணங்கும்போது நாராயணு என்று கூறுகிருர்கள். இது எதைக் குறிப்பிடுகிறது என்ருல் இந்த மூன்றும் ஒன்றுதான்; அதுதான் ப்ருஹ்ம வாசகமான ப்ரணவத்தின் லக்ஷ்யம் என்பதைத்தான் குறிப்பிடுகின்றது. இந்த சிவசக்தி மயமான ப்ரஹ்மமானது திலத்தில் தைலம் போலவும், தயிரில் நெய் போலவும், ப்ரவாஹத்தில் ஜலம் போலவும், அரணிக்கட்டையில் அக்னி போலவும் இந்த ஜகத்தில் ஊடுருவி ப்ரகாசிக்கின்றது.

## 8. ப்ரஹ்மம் ஒன்றே

**ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்மம்**- என்னுமிடத்தில் ப்ரஹ்மம் ஒன்றேதான் என்று அறுதியிட்டுவிட்டு அத்விதீயம் அதாவது இரண்டில்லாதது என்று கூறவானேன் என்ருல் சேர்ந்தது சிவம் சக்தி என்று இவ்விதம் இரண்டாகத் தோன்றினுலும் ஒன்றேதான் அது இரண்டில்லாதது என்பதைத்தான் உறுதிப்படுத்துகிறது. இன்னும் இவ்விதம் எவ்வளவோ கூறலாம்.

## 9. கர்ப க்ருஹம்-43/48

**கர்பக்ருஹம்** என்ருல் கருப்பை. ஜீவனை 10 மாதம் சுமப்பதுதான் கருப்பை. எங்கும் நிறைந்து, ஊரும் பெயரும் இல்லாமல் இருக்கும் பரம்பொருள் பக்தர்களைக் காப்பதற்காக இருக்கும் இடத்தையும் கர்பக்ருஹம் என்று கூறுவார்கள். அதாவது கருவறை. ஜீவன் இருக்கும் இடத்திற்கும் தேவன் இருக்கும்

இடத்திற்கும் கருவறை என்றுதான் பேர். இந்த இரண்டிற்கும் பேதமுண்டாவெனில் இல்லை. ஆனுல் ஜீவனை தரிக்கும் கருவறை 10 மாதம் அதனை சுமந்து பின் பூமிக்கு கொண்டுவந்து விடும். ஆனுல் தேவனை வைத்துக் கொண்டிருக்கும் கருவறை ஆயிரம் ஆண்டுக்கணக்காக தேவனை வைத்துக் கொண்டிருக்கும்.

**கர்ப** - என்ருல் கடபயாதி ரீதியாக **க=3, ர்ப=4.** அதாவது **கர்ப்பம்** என்ருல் 43. இந்த 43 என்ற எண் நாற்பத்து முக்கோண சக்ரமான ஸ்ரீசக்ரத்தைத்தான் குறிப்பிடுகின்றது. இந்த ஸ்ரீசக்ரமும் ***சிவயோர்வபு:*** என்னும் ப்ரமாணத்தின்படி சிவசக்திகளின் சரீரம்தான். இதை அனுஷ்டித்துக் கொண்டுதான் ப்ரம்மசக்தி விளங்குகிறது என்ருல் மஹாப்ரகாசம் என்று பொருள். இந்த மஹாப்ரகாசம் என்பதுதான் ப்ரஹ்மம். இந்த ***பர்க:*** என்ற மஹாப்ரகாசம் பக்தர்களைக் காப்பதற்காக திரும்பி ***கர்ப:*** என்று ஆகியுள்ளது. முன்கூறினதுபோல் அகார உகார மகார வாசகமான ப்ரஹ்மம் பக்தர்களைக் காப்பதற்காக உகார மகார அகார வாசகமான உமா என்று பேர் பெற்றதுபோல.

ஆலயத்தில் இருக்கும் கர்பக்ருஹம் என்னும் ஸ்ரீசக்ரரூபமான கருவறையில் சிவசக்த்யைக ரூபமாக விளங்கும் ப்ரஹ்மமானது அழிவில்லாமல் எப்போதும் விளங்கும். ஜீவனைத் தரிக்கும் கருப்பை யையுடையவர்கள் ஸ்த்ரீகள். ஆலயத்தில் விளங்கும் தேவனை தரிக்கும் ஸ்ரீசக்ரரூபமான கருப்பையை யுடையவள் ஸச்சிதானந்த ப்ரஹ்ம சக்தி.

ஆலயத்தின் கருப்பையில் இருக்கும் ப்ரஹ்ம சக்திக்கு பெயர் **தேவ:** ।। ஸ்த்ரீகளின் கருப்பையில் இருக்கும் வஸ்துவிற்கு பெயர் ஜீவன். இதில் கடபயாதி ரீதியாக **தேவ: (தேவி:)** என்ருலும் **ஜீவ:** என்ருலும் 48 என்ற எண் வரும். இந்த தேவி என்ற பதத்தால் குறிப்பிடப்படும் ப்ரஹ்மசக்தி தான் அவித்யா வாஸனையால் ஜீவனுகிறது. இதைத்தான் ஸ்ரீபகவத் பாதாளும் **ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:** என்று ஜீவன் தான் ப்ரும்மசக்தி என்று கூறுகிருர். ருத்ரம் பரமேச்வரனையும் சமகம் தேவியையும் குறிப்பிடுகிறது. இந்த சமகத்தின் கடைசீ அன்வாஹத்தில் **ஏகாதசம்** என்று ஸங்க்யையைக் கூறிக்கொண்டு வந்து கடைசியில் **அஷ்டா சத்வாரிம்கும்ச** என்று 48 என்ற எண்ணை முடிவாகக் கூறுவதை நன்ருக கவனிக்கவும். இது எதை குறிப்பிடுகிறது என்ருல் 48 என்ற எண்களையுடைய ஜீவ **பாவ**த்திற்குக் கீழ்பட்ட நிலையில்லை என்பதும், இதே 48 எண்களையுடைய தேவீ என்று குறிப்பிடும் ப்ரம்மசக்திக்கு மேற்பட்ட நிலையில்லை என்பதும் தெரிகிறது. மேலும் இந்த ப்ரம்மசக்தியை நமக்கு காட்டித்தரும் குருவிடமும் 48 என்ற எண்களையுடைய அக்ஷரபீடம்தான். அதாவது அக்ஷரங்கள் என்ருல் க்ஷரமில்லாதது- நாசமில்லாதது என்று பொருள். இந்த அக்ஷரங்கள் **அ முதல் அ: வரை** 16, **க முதல் த வரை** 16, **த$^2$ முதல் ஸ வரை** 16 என்றபடி மூன்றுகோடுகளாக முக்கோணமாக நம் சிரஸில் ஓர் பீடமாக விளங்குகிறது. அந்த பீடத்தில்தான் ஸ்ரீகுரு விளங்குகிருர். ஸ்ரீதேவி ஸ்வரூபாளான ஸ்ரீபாஸ்கரராயர் அவர்கள் தன் வரிவஸ்யா ரஹஸ்யத்தில் -

***அகதாஸனம் ஹளக்ஷாந்தம் மாஸாத்ய மாமகம் ஞானம் மாமகவே வானந்தம மஹ்யம் ததத: ஜயந்தி குருசாஸ:***

-என்று கூறுகிருர். இதல்லாமல் தந்த்ரங்களெல்லாம்

**ஆகதாஸனம்** என்றே பெயர் கூறுகின்றன. ஆகவே குருவின் பீடம் 48. தேவீ 48. ஜீவ: 48. இந்த மூன்றும்

***ஈச்வரா குருராத்மேதி மூர்த்தி த்ரய விபாதத: ॥***

-என்னும் ப்ரமாணத்தின்படி அந்த மஹாப்ரகாசம் ஒன்றே மூன்று பேதத்துடன் விளங்குகிறது என்பதைக் காட்டுகிறது.

**தேவ:** என்ற பதத்தைத் திருப்பினால் **வேத:** என்று வரும். தேவ: என்ற பதத்தால் குறிப்பிடும் மஹாப் ரகாசமே வேத ரூபமாகவும் அதாவது அறிவு ரூபமாகவும், வேத என்றால் (84) எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசி ஸ்வரூபமாகவும் விளங்குகிறது என்பதையும் குறிப்பிடுகிறது.

ப்ரஸ்தானத்ரயம் என்னும் கீதை, ப்ரம்மஸூத்ரம், உபநிஷத் இவைகளுக்கு ஸ்ரீபகவத் பாதாள் பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். இந்த பாஷ்யத்தைக் குருமுகமாக பாடம் கேட்கும்போது சிஷ்யர்கள் **ஓம் அத** என்று மும்முறை கூறுவார்கள்.

***ஓம்காரச்ச அதசப்தச்ச தவாவேதன ப்ரம்மண: புரா ।***
***கண்டம் பித்வா விநிர்யாதௌ தஸ்மான் மாங்களிகாவுபௌ***

- என்றும் கூறுவார்கள். அதாவது **ஓங்காரமும் அத** என்னும் சப்தமும் ஆகிய இரண்டு சப்தங்களும் ப்ரும்மாவின் கழுத்தைப் பிளந்துகொண்டு வந்தன. ஆகையால் இந்த இரண்டு சப்தங்கள் மங்கள வாசகங்கள் என்று பொருள். ஓங்காரம் ப்ரும்ம வாசகம். நமக்கு இந்த ப்ரும்ம ஞானம் ஏற்பட வேண்டும். அதற்காக ஓங்காரத்தையும், **அத** என்னும் பதம் குருஸ்மாரகம் - குருவையும் நினைவுபடுத்துகிறது.

எவ்விதம் என்றால் அகாராதி க்ஷகாராந்தமான மாலையை அக்ஷரமாலை என்று கூறுகிறோம். அதாவது அக்ஷரங்களின் முதல் கடைசி அக்ஷரங்களை மட்டும் சேர்த்து அக்ஷமாலை என்றுதான் கூறுகிறோம். அதுபோல் **அகத** என்ற பதத்தின் நடுவில் இருக்கும் அக்ஷரத்தைவிட்டு **அத** என்றும் கூறப்படுகிறது. ஏன் இவ்விதம் கூறவேண்டுமென்றால் அதுதான் ரஹஸ்யம்.

**அத** என்று கூறப்படும் வாக்கிற்கு லக்ஷ்யமான குருவால்தான் ஓங்கார வாசகமான ப்ரும்மத்தை அறிய முடியும். இதை நினைவுபடுத்தத்தான் **ஓம் அத** என்று பாஷ்ய பாடம் கற்றுக் கொள்வார்கள். 48 அக்ஷரங்களை உடைய பீடத்தில் விளங்குபவர் என்று கூறுமிடத்து இந்த விஷயமும் ஞாபகம் வந்ததால் கூறினேன்.

முன்சொன்ன கர்பப்க்ருஹத்தில் பிரதிஷ்டையாயிருக்கும் மூர்த்திக்கு மூலவர் என்று பெயர். இவர் எக்காரணம் கொண்டும் வெளியில் எக்காலத்திலும் வருவதில்லை. ஆனால் அதே மூர்த்திக்கு வேறொரு உருவத்துடன் ஆனாலும் வேறுபடாத வடிவத்தில் உத்ஸவர் என்ற பெயரில் பக்த அனுக்ரஹத்துக்காக வீதிசுற்றி வருவதை நாம் பார்க்கிறோம். இந்த உத்ஸவமூர்த்தி வெளியில் கிளம்பினால் எடுபிடி ஆட்கள், வாணவேடிக்கை, மேளவாத்தியங்கள், தீபாலங்காரங்கள் இவைகளுடன்; விமானம், சப்பரம், தேர் முதலான வாகனங்களில் சில சமயம் மனிதர்கள் தூக்கிக்கொண்டும் தெருதெருவாகவும் ஊர்ஊராகவும் சென்று பக்தர்களை அனுக்கிரஹம் செய்கிறார்.

உத்ஸவம் என்றால் உயர்ந்த யாகம் என்றும் மூலம் என்றால் ஆணிவேர் என்றும் அர்த்தம். ஆணிவேர்

இல்லையானால் மரம் காய்ந்துவிடும். இதைத்தான் கீதாசார்யனும் - **ஊர்த்வமூலம் அதச்சாகம்** என்று கூறுவார்போலும். வேர் கண்ணிற்கு தெரியாது. கிளைகள், பழம், காய், இலை, பூ, பிஞ்சு என்று விஸ்தாரமாக இருப்பது நம் கண்களுக்குத் தெரியும். மூலவர் என்ற பெயர் இருப்பதால்தான் உத்ஸவர் என்ற பெயரும் ஏற்பட்டது.

## 10. ஆலய தத்துவம்

கர்ப்பக்ருஹம் என்று கூறும்போது நமக்கு ஆலயம் என்று ஞாபகம் வந்ததால் ஆலய தரிசனத்தின் தத்துவத்தையும் கூறுகிறேன். ஆலயம் என்றால் - **ஆ ஸமந்தாத் லீயதே இத்யாலய:** என்பதாகும். ஆலயத்திற்கு தேவ தர்சனத்திற்காகச் செல்லவேண்டும் என்ற ஞாபகம் வந்தவுடன் மற்ற சித்தவிருத்திகள் லயித்து விடுகிறது. அதனால்தான் ஆலயம் என்று பெயர். ஜீவன் இருக்கும் சரீரத்தை ஸ்தூல ஸூக்ஷ்ம காரணசரீரங்களாக கூறப்படுகின்றது. இதுபோல் தேவன் விளங்கும் ஆலயத்திற்கும் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணசரீரங்கள் உண்டு. ஸ்தூலம்- கோபுரம், ஸூக்ஷ்மம்- ஆலயம், காரணம்- கருவறை. இதில் அபிப்ராயபேதங்களுண்டு. அதை அவரவர்கள் யுக்திபோல் பார்த்துக் கொள்ளலாம்.

## 11. அர்ச்சனை சாமான்களின் தத்துவம்

**ரிக்தஹஸ்தேன நோபேயாத் ராஜானம் தைவதம் குரும்** -என்ற ப்ரமாணத்தின்படி அரசன்



தேவதை குரு இவர்களை தரிசனம் செய்யச் செல்லும்போது வெறும் கையாகச் செல்லக்கூடாது. தங்கள் கையில் தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு சூடம் இவைகளைக் கொண்டு செல்வார்கள். நம் சரீரமும் ஆலயம் தான். இந்த ஆலயத்தில் விளங்கும் ஆத்மாவை தரிசனம் செய்வதற்கு ஆனந்தமான ஸாதனங்கள் தேவை. சுத்தமான ஸத்வகுணம், பற்றற்ற நிலை, ஞானம், மனபரிபாகம், த்ரிபுடி அற்றதான அகண்டாகார வ்ருத்தி, இந்த அகண்டாகார வ்ருத்தியும் உபசமனமாய் அந்த ஜ்யோதியின் நிலையிலேயே சேர்த்தல் இவைதான் ஆனந்தமான ஸாதனங்கள். நாம் நமக்கன்னியமாக ஆலயத்தில் இருக்கும் தேவனை தரிசனம் செய்யச் செல்லும்போது மேற்சொன்ன ஆனந்தமான ஸாதனங்களின் பிரதிநிதியாக தேங்கரய் பழம் வெற்றிலை பாக்கு சூடம் இவைகளை கொண்டு செல்கிறோம்.

கருவறையில் தேவன் ஸந்நியில் திருமேனி தீண்டுபவர்களுக்கு குருக்கள் என்று பெயர். ஏனெனில் குருவின் அருளால்தான் நாம் தேவனை தர்சனம் செய்யமுடியும். அந்த ஸந்நிதி குருக்கள் நாம் கொண்டு சென்ற அர்ச்சனைப் பொருட்களை வாங்கிக்கொண்டு நம் கோத்ரம், நக்ஷத்திரம், பெயர் இவைகளைக் கேட்டு இன்ன கோத்ரம், நக்ஷத்திரம், பெயருடையவர் இவருக்கு எல்லாவிதமான க்ஷேமங்களும் ஏற்படவேண்டும் என அர்ச்சனை செய்கிறேன் என்று ஸங்கல்பம் செய்கிறார். (இம்மாதிரி ஸங்கல்பம் செய்யவேண்டுமா? நடுவில் இந்த தரகர் எதற்கு? கடவுளுக்கு இவர் சொல்லித்தான் நம்மைத்தெரிய வேண்டுமா? என்ற ஸந்தேஹங்கள் எல்லாம் இந்தகாலத்தில் ஏற்படுகின்றன. இதற்கு

காரணங்கள் பலவுண்டு. பின்னர் விஸ்தாரமாக விளக்குவோம்.) இவ்விதம் கோத்ரம், நக்ஷத்திரம், பெயர் எல்லாம் சொல்லி ஸங்கல்பம் செய்து தேங்காயை ஸமமாக உடைத்து இளநீரைக் களைந்து தேங்காயின் குடுமியை பிய்த்து எறிகிருர். இது எதைக் காட்டுகிறது என்று பார்ப்போம். தேங்காயை ஸமமாக உடைத்தது- அர்ச்சனை செய்பவரின் ஹ்ருதயம் ஒன்றிலும் பற்றில்லாமல் சுத்த ஸத்வகுணமாகவே உள்ளது என்பதையும், குடுமியை பிய்த்தல் - என் ஞானக்கண் மறைப்பை நீக்கிவிட்டேன் மூன்ருவது கண்ணை ஞானக்கண் திறந்துவிட்டது என்பதையும், வாழைப்பழத்தை சிறிது உறித்து வைப்பது- என் மனம் நன்ருக கனிந்து விட்டது என்பதையும் காட்டுகிறது.

சுண்ணும்பு இல்லாமல் வெற்றிலை பாக்கு மட்டும் நிவேதனம் செய்யக் கூடாது. ஏனெனில்-

**பூகிபல ஸமாயுக்தம் நாகவல்லி தளைர்யுதம் ।**
**கற்பூரசூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம்**

- என்று ஸ்லோகம் கூறுகிறது. சுண்ணும்புக்கு பேர்தான் சூர்ணம். பச்சகற்பூரம் சேர்ந்த சுண்ணும்பு என்று அர்த்தம். எனவேதான் பச்சகற்பூரம் சேர்ந்த சுண்ணும்புடன் தான் வெற்றிலை பாக்கு நிவேதனம் செய்யவேண்டும். பெரியோர்கள் அம்பாளை பூஜை செய்யும்போது சுண்ணும்புவைத்த வீடிகையாகத்தான் நிவேதனம் செய்கிருர்கள். மேலும் சுண்ணும்புக்கு ஸுதை என்றும் பேர். ஸுதை என்ருல் அம்ருதம். வெற்றிலை பாக்கு சுண்ணும்பு த்ரிபுடியைக் குறிக்கிறது. த்ரிபுடி என்ருல் ஞாதா ஞானம் ஞேயம்- அதாவது அறிபவன் அறிவு அறியவேண்டியது. இந்த மூன்றும் வேறாகாமல் ஒன்ருனுல் அதன் உருத்தான் அகண்டாகார வ்ருத்தி. இதன் நிறம் சிவப்பு. வெற்றிலையில் சுண்ணும்பு

தடவி பாக்குடன் சேர்த்து வாயில் இட்டு நன்ருக மென்ருல்தான் சிவப்பு நிறம் வரும். இதனுல்தான் சுண்ணும்பு இல்லாமல் நிவேதனம் இல்லை என்பது தெரிகிறது. அடுத்ததாக சூடம் காட்டுவது. இந்த சூடம் எரிந்தபின் மிச்சம் ஒன்றும் இருக்காது. இது அகண்டாகாரவ்ருத்தி தன்னிலேயே உபசமனம் ஆவதைத்தான் குறிக்கின்றது. கற்பூரம் காண்பித்தவுடன் அதை கண்ணிலே ஒற்றிக்கொள்கிறார்கள். இதன் காரணம் என்னவென்றால் - கற்பூர ஜ்யோதியை கண்மூலமாக தன் ஆத்ம ஜ்யோதியிலே கலத்தல். ஸூர்யன் என் கண்ணிலே இருக்கிருன். கண் ஹ்ருதயத்திலே இருக்கிறது. ஹ்ருதயம் என்னிலே இருக்கிறது. நான் அம்ருத்திலே இருக்கிறேன். அம்ருதம் ப்ரம்மத்திலே இருக்கிறது. என்றெல்லாம் வேத வாக்யங்கள் கூறுகின்றன. பாஹ்யமான ஜ்யோதியை கண்ணிற்கு அதிதேவதையான ஸூர்ய ஜ்யோதியின் மூலம் ஆத்ம ஜ்யோதியில் கலத்தல் என்பதுதான் இதன் தத்வம்.

***கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம், ஆலயம் தொழுவது சாலவும் நன்று*** - என்றெல்லாம் ஆத்மஞானிகளான முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். நாமும் இவ்விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டு ஆலயம் சென்று தேவதரிசனம் செய்தால் விரைவில் தேவியின் அருளால் ஆத்மஞானத்தை அடையலாம்.

# 12. சிவன்கோவில் ப்ரதக்ஷிண முறை

**வ்ருஷம் சண்டம் வ்ருஷம் சைவ ஸோமஸூத்ரம் புனர் வ்ருஷம் சண்டம் ச ஸோமஸூத்ரம் ச புனச் சண்டம் புனர் வ்ருஷம் ॥**

அதாவது ஈச்வர சன்னிதியில் இருக்கும் நந்தியை தரிசனம் செய்துவிட்டு ஈச்வரனுக்கு ஈசான்ய பாகத்தில் இருக்கும் பகவான் சண்டிகேச்வரனிடம் சென்று பின்பு நந்தியிடம் வலமாகவே வந்து வடக்குபாகத்தில் இருக்கும் அபிஷேக தீர்த்தம் விழும் ஸோமஸூத்ரம் என்னும் இடம் சென்று மறுபடி நந்தியிடம் சென்று பிறகு சண்டிகேச்வரன் அடுத்து ஸோமஸூத்ரம் மறுபடி சண்டிகேச்வரன் பிறகு நந்தியிடம் சென்று வெளியில் வரவேண்டும்.

# 13. அம்மா தாயே !

**அம்மா** என்ற சொல் தென்மொழியில்தான் இருக்கிறது. இந்த அம்மா என்ற சொல் பல அரிய விஷயங்களை தெரிவிக்கின்றது. இது ஓர் மஹாவாக்யம். ஓர் மஹாமந்த்ரம் என்பதிலும் சிறிதும் ஸந்தேஹமே யில்லை.

தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை - என்று ஔவைப்பாட்டி கூறியிருக்கிருள். **மாத்ருதேவோ பவ** - என்பது உபநிஷத்து. தாயிடம் அன்பில்லாத ஜன்மம் வீணே என்று கூறப்படுகின்றது. **ஜனனீ ஜன்மபூமி ஸ்வர்கபூமி கரீயஸீ** - தாயும் தான் பிறந்த இடமும் ஸவர்க்த்தைவிட பெரியது என்று கூறப்படுகின்றது. மற்ற பாஷைகளில் பெற்ற தாயை அழைப்பதற்கு **மா**



என்ற அக்ஷரம் கலந்துதான் இருக்கும். ஆந்த்ர பாஷையில் தாயை **தல்லி** என்பார்கள். ஆனால் மலையாளத்தில் தல்லி என்றால் **அடித்தான்** என்று அர்த்தம். இதில் ஓர் ஸ்வாரஸ்யம் இருப்பதால் கூறுகிறேன் - கெட்ட மகனை சிக்ஷித்து திருத்துபவள் என்று அர்த்தம் சொல்லலாம். எந்த ஜாதியாக இருந்தாலும் பெயர் தெரியவில்லை என்றால் நாம் அம்மா என்றுதான் கூறுகிறோம். பிச்சைக்காரனும் **அம்மா தாயே!** என்றுதான் அழைக்கிறான். கன்றுகுட்டி கூட அம்மா என்றுதான் கத்துகிறது. அம்மா என்று அழைக்கும்போது அதிலே இருக்கும் கனிவை அனுபவித்தவர்கள்தான் அறிவார்கள்.

மகன் ஸன்யாஸியானால் தாயை வணங்க வேண்டும். தகப்பனாரை வணங்கக்கூடாது. ஆனால் தகப்பன் ஸந்யாஸியான தன் மகனை வணங்கவேண்டும். இவ்விதம் தாய்க்கு பெரியோர்கள் மிகவும் கௌரவம் கொடுத்திருக்கிறார்கள்.

அம்மா என்ற சொல்லைப் பிரித்தால் **அம் + ஆ** என்று வரும். **அக்ஷராணாம் அகாரோஸ்மி** - என கீதையிலும் **அகார ஸர்வ வர்ணாய ப்ரகாசய: சாம்ப சிவ:** - என்று தந்த்ரங்களிலும், **அகர முதல எழுத்தெல்லாம்** என்று வள்ளுவரும் அகாரத்திற்கே முதலிடம் கொடுத்து அகாரம் சிவம்தான் என்று கூறியிருக்கிறார்கள். அம்மா என்று அழைக்கும்போது **அம், ஆ** என்று வருகிறது. நான் சிவமாக அடங்கி யிருந்தேனே எனவும் **ஆ** வெளிவந்து ஜீவனாக அவஸ் தைப்படுகிறேனே என்றும் கதறுகிறான். இதற்கு தாய்

பதில் சொல்லுகிருள். பசிக்கும் குழந்தையை இடுப்பில் வைத்துக்கொண்டு கிண்ணியில் பால் சாதத்தை பிசைந்துவைத்துக்கொண்டு குழந்தையைப் பார்த்து **ஆ, அம்** என்று சொல்லுகிறாள். அதாவது ஜீவனாக வந்து ஏன் அவஸ்தைப்படவேண்டும் முன்போல் சிவனாகவே இருந்துவிடு **ஆ-அம்** என்று சொல்லுகிறாள். இவ்வாறு சொல்லி பால் சாதத்தை ஊட்டிவிடுகிருள். அம்மா என்று கூப்பிட்டு தாய் திருப்பிச்சொல்லும் **ஆ அம்** என்பதை நன்ருக கவனித்துப்பாருங்கள். உண்மை தெரியவரும். எனவே அம்மா என்ற சொல் **தத்வமஸி** என்ற மஹாவாக்ய அர்த்தத்தைத்தான் கொடுக்கிறது.

அம்மா தாயே! என்ருல் நின்னருளைத்தாயேன் என்று அர்த்தம். வடமொழியில் தாயை கூப்பிடும்போது **மாதா** என்பார்கள். இப்பதத்தைப் பிரித்துப்பார்த்தால் **மா + அத** என்று வரும். மா என்றால் வேண்டாம் என்று அர்த்தம். **அத** என்றால் இதனால் எனப்படும். இதனால் - அதாவது இந்த காரணத்தால் வேண்டாம் என்ருல் ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி தத்தளித்து கரையேற வழிதெரியாமல் இருப்பதால் இந்த ஜன்மம் எனக்கு வேண்டாம் என்ற அர்த்தத்தைத்தான் **மாதா** என்னும் பதம் தெரிவிக்கிறது. இந்த ஜன்மாவிற்கு ஹேதுவான தாயை நாம் நன்ருக காப்பாற்றி மனம் கோணாமல் நடந்து வந்தால் நிச்சயமாக அந்த தாயின் அருளால் நம் ஜன்மஸாபல்யம் அடையும் அதாவது அந்த தாயின் அருளால் இனி இந்த தாயின் கருக்குழியில் வாஸம் செய்யாத நிலைமை ஏற்படும்.

# 14. அபவர்க்க ப்ரதாயினி !



உலகை ஈன்ற தாயை நாம் ஆராதித்து வந்தால் நமக்கு இந்த ஜன்மாவில் அனுபவிக்க வேண்டிய போகங்களையும் மோக்ஷத்தையும் அவள் உறுதியாய் அருள் செய்வாள். எங்கு போகம் இருக்கிறதோ அங்கு மோக்ஷம் இல்லை. எங்கு மோக்ஷம் இருக்கிறதோ அங்கு போகம் இல்லை. மஹாத்ரிபுர ஸுந்தரியை தனக்கு அபேதமாக உபாஸனை செய்பவர்களுக்கு போகம் மோக்ஷம் இரண்டும் கையிலே இருக்கின்றன என்று தந்த்ரங்கள் கூறுகின்றன. ***ஆராதிதா ஸைவ ந்ருணாம் போக ஸ்வர்க்க அபவர்க்கதா*** என்று ஸப்தசதியும் கூறுகின்றது. அம்பாளை ஆராதித்தால் போகம், ஸ்வர்க்கம், அபவர்க்கம் என்னும் மோக்ஷம் இவைகளை அம்பாள் கொடுக்கிறாள்.

போகம் என்றால் இஹலோகத்தில் ஒருவரையும் யாசிக்காமல் தனக்கு வேண்டியதான கனக வஸ்து வாகனாதிகள். ஸ்வர்க்கம் என்றால் தேவலோகத்தில் அனுபவிக்கக்கூடிய ஸுகங்கள். இவைகளையும் **அபவர்க்கம்** என்னும் மோக்ஷத்தையும் அம்பாள் கொடுப்பாள்.

**அபவர்க்கம்** என்றால் சேர்க்கை இல்லாதது ரூடி - என்று பண்டிதர்கள் கூறுகிறார்கள். **அபவர்க்கம்** என்றால் பவர்க்கம் இல்லாதது. பவர்க்கம் என்றால்

***பஞ்சத்வ பல பந்தாச்ச பயம் ச மமதாபிச ।***
***பஞ்சைதே யதா நோஸந்தி ஸோபவர்க்க ப்ரகீர்த்தித:***

**பஞ்சத்வம்** என்றால் சாவு. சாவு இல்லையென்றால் ஜன்மாவும் இல்லை **பலன்** என்றால் புண்யபாப பலன்கள். **பந்தம்** என்றால் கட்டுப்படுதல். **பயம்**. **மமதா** என்றால் நான் எனது என்ற அஹங்காரங்கள். இவைகள் எங்கு இல்லையோ அது **அபவர்க்கம்**. இவைகள் ஒன்றுமே இல்லாத இடம்தான் **அபவர்க்கம்** என்னும் மோக்ஷம். (**அ- என்றால், 5 ப- என்றால் 4.** இந்த 5,4 என்ற எண்கள் ஸ்ரீசக்ரத்தில் இருக்கும் 5 சக்தி சக்ரங்களையும் 4 சிவ சக்ரங்களையும் குறிப்பிடுகின்றது.)

மற்றோரிடத்தில் கூறும்போது அபவர்க்கத்தினால் ஆன மூர்த்தி **அபவர்க்கத்தைக்** கொடுக்கிறது என்று வருகிறது.

***"பார்வதீ பணி பாலேந்து பஸ்ம மந்தாகினீததா!***
***பவர்க ரசிதசு மூர்த்தி; அபவர்க்க ப்ரதாயினி"***

(இந்த ஸ்லோகம் ஏதோ ஒரு க்ரந்தத்தில் பார்த்தது- ***ஸமயோசித பத்யமாலிகா*** என்று தோன்றுகிறது.)

**பினாகம்** என்னும் வில்லுடனும் **பணி** என்ற பாம்பு ஆபரணங்களுடனும் **இளம்பிறை**யுடனும் கூடினதும் **விபூதி**யுடன் **கங்கை**யை உடையவருமான மூர்த்தி **பினாகம், பணி, பாலேந்து, பஸ்மம், மந்தாகினி** இவ்வாறு அபவர்க்கத்துடன் ஆரம்பிக்கும் எழுத்துடன் கூடிய மூர்த்தி **அபவர்க்கம்** என்னும் மோக்ஷத்தை கொடுக்கின்றது.

# 15. மூன்றும் ஒன்றே !

ஸ்ரீ காமாக்ஷீ விலாஸம் - ஸ்ரீமஹா த்ரிபுரஸுந்தரியான காமாக்ஷிதான் **ப்ரஹ்மம்** என்றும்; (1) இந்த காமாக்ஷி காமகோடி பீடத்தில் விளங்கும் ஸ்ரீமஹா த்ரிபுரஸுந்தரியினிடத்து ஜ்யோதி ஸ்வரூபமான பூர்ணசக்தியாகவும்; (2) தவக்கோலத்தில் விளங்கும் காமாக்ஷியினிடத்தில் ஓர் அம்ச ரூபமாகவும்; (3) ஸ்வர்ண காமாக்ஷியினிடத்தில் கல்யாண ஸ்வரூபமாகவும்; (4) ஏகாம்பரம் என்னும் ஜ்யோதி லிங்கத்தில் நிர்குண சிவ ஸ்வரூபிணியாகவும்; (5) ஏகாம்ரநாதன் என்னும் பெயருடன் விளங்கும் லிங்கமூர்த்தியில் ஸகுண சிவ ஸ்வரூபிணியாகவும்; (6) தன்னுடைய அர்த்தாம்சமாவும், பிம்பரூப மாகவுமுள்ள வரதராஜப்பெருமானிடத்தில் புருஷ ரூபிணியாகவும் இவ்வாறாக அறுவகை நிலையிலும் ஸ்ரீகாமாக்ஷிதேவி விளங்குகிறாள் - என்று கூறுகிறது.

அதாவது **சக்தியம்சம் மூன்று; சிவாம்சம் இரண்டு; விஷ்ணும்சம் ஒன்று.** ஆகையால் சக்தி, சிவம், விஷ்ணு இம்மூன்றும் ஒன்றுதான்.இந்த விஷயத்தில் அத்வைதிகளான ஸன்யாசிகள் இவ்விஷயங்களை தங்கள் செய்கையில் காட்டுகிறார்கள். அதாவது சைவ சின்னமான விபூதி ருத்ராக்ஷங்களை தங்கள் உடம்பில் தரித்துக் கொள்கிறார்கள். யாராவது தங்களை வணங்கினால் நாராயணா என்கிறார்கள். சக்தியை ஸதா மனதில் த்யானித்துக் கொண்டு இருக்கிறார்கள். பரம அத்வைதிகளான ஸன்யாசிகளே நமக்கு இம் மூன்றும் ஒன்றுதான் என்னும் விஷயத்தை வ்யக்தமாகவே காட்டுகிறார்கள். மேலும் ஒருவர் ஸன்யாசம் வாங்கிக் கொண்டால் ஸ்வபாவமாகவே

சிவமாக இருந்தாலும் மொட்டையடித்து, விபூதி ருத்ராக்ஷம் தரிக்கவைத்து, காஷாய வஸ்த்திரம் உடுக்க வைக்கிறுர்கள். ஸன்யாசி வெள்ளை நிற வஸ்த்திரம் கட்டக்கூடாது. காஷாயம், சிவப்பு இவை அம்பாளின் சின்னங்கள். ஸன்யாசிகளும் குங்குமம் தரிப்பார்கள். இதுவும் சிவசக்தி ஸ்வரூபத்தைத்தான் காட்டுகிறது.

**சிவசக்தி ஐக்ய ஞானம்** ஏற்படுவதற்கு நமக்கு பெரியோர்கள் நாம் வாழ்வில் செய்யும் பல காரியங்களிலும் அனேக விஷயங்களை குறிப்பாக காட்டியிருக்கருர்கள்.

## 16. வீணா, வேணு, ம்ருதங்கம்

**வீணா:-** வீணா என்றால் நாதத்தை ஒலித்துக்காட்டும் ஓர் கருவி. பாகவதர்கள் கச்சேரிக்கு சுருதிக்காக வைத்துக்கொள்வது, ஸரஸ்வதிதேவியின் கையில் இருப்பது, நான்கு கம்பிகளையுடையது. இதனை பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்று கூறலாம். பாகவதர்கள் கச்சேரி செய்யும்போது இந்த நான்கு கம்பிகளை மீட்டிக் கொண்டு நாதத்தை எழுப்புவார்கள். இந்த நாதத்தை அனுஸரித்துதான் இவர்கள் சப்தத்தை எழுப்புவார்கள். பாடுபவர்களுக்கு இதுதான் ஆதாரம். இதில் கடைசியாக இருக்கும் ஒலி **ஹ்ரீம்**காரம் போலிருக்கும். சிவசக்திகளின் சேர்க்கையிலிருந்து தான் நாதம் உண்டாயிற்று. ஆனதால்தான் நாதப்ரஹ்மம் என்று கூறுவார்கள். நாதப்ரஹ்மம் சிவசக்திகளின் ஐக்யம்தான். சிவசக்திகள் இந்த வாத்யத்தில் எவ்விதம் இருக்கிறது என்றால் வீ=4=சிவம், ணா=5=சக்தி. இது இரண்டும் சேர்ந்ததுதான் சிவசக்திஐக்யம்.

**வேணு:-** வேணு என்ருல் மூங்கில்குழல். கண்ணன் எப்போதுமே கோகுலத்தில் இதனை ஊதிக்கொண்டு இருப்பான். இதில் இருக்கும் துவாரங்கள் வழிக்கு ஊதி நாதத்தை எழுப்பி தானும் ஆனந்தத்தை யடைந்து ஸகல ஜீவராசிகளையும் ஆனந்தத்தில் லயிக்க செய்வான். அதனுல்தான் அவனை வேணுகான லோலன் என்பர். இந்த துவாரங்களின் வழியாக வெளிப்படும் நாதம்தான் ஸகல ஜீவராசிகளையும் ஆனந்தத் அடையச் செய்கிறது.

***பசுர்வேத்தி சிசுர்வேத்தி வேத்திகானரஸம் பணீ*** - என்று ப்ரமாணம்.

**பசு:-** பசு என்ருல் ஸாதாரணமான லோக ஸம்பந்தமான பசு அல்ல. இந்த பசுக்கள் கிருஷ்ண கானத்தைக் கேட்டு மெய்மறந்து நிற்கும். அவ்வளவு தான். பசு என்ருல் நந்திகேச்வரன். இந்த நந்திகச்வர னுக்குத்தான் பாட்டின் ரஸம் நன்ருக தெரியும். அதாவது ஸங்கீத சாஸ்த்திரத்தின் நுணுக்கமான விஷயங்கள் நன்ருக ஸங்கீத சாஸ்த்திரம் கற்றவர்களுக்குத்தான் தெரியும். மற்ற பாமர ஜனங்கள் ஸங்கீத ரஸிகர்கள்தான். இவர்களைத்தான் பசு என்றது. நந்திகேச்வரன்தான் ஸங்கீத சட்டம் தெரிந்தவர். இந்த வேணுவும் சிவசக்தியாத்மகமானது. எவ்விதமென்ருல் வே=4, ணு=5. இந்த நான்கும் ஐந்தும் சிவசக்திகளைத்தான் குறிக்கிறது.

**ம்ருதங்கம்:-** ம்ருதங்கம் என்ருல் மண்ணை அங்கமாக உடையது என்று பெயர். மண்ணிஞல் பண்ணி, தோல்களை இழுத்து நான்கு பக்கமும் கட்டி இருப்பார்கள். அந்த வயர்கள் நன்ருக இறுக்கமாக இருந்தால் சப்தமும் உயர்ந்திருக்கும். கொஞ்சம் அயவாக இருந்தால் சப்தமும் கம்மியாக இருக்கும். இந்த ம்ருதங்கம் வடக்கே தான் இருக்கிறது. தென்தேசத்தில் பலாமரத்தின் கட்டையை நன்ருக

கடைந்து, சுத்தம் பண்ணி அதில் தோல்வாருல் நான்கு பக்கமும் இழுத்து கட்டியிருப்பார்கள். இது முறுக்கமாக இருந்தால் நன்ருக நாதம் கேட்கும். இந்த ம்ருதங்கமும் சிவசக்தி யாத்மகமானது. பஞ்சதசாக்ஷரி மந்த்ரமும் சிவசக்தி யாத்மகமானது அல்லவா! இந்த ம்ருதங்கம் என்னும் பதமும் கடபயாதி ரீதியில் 16 என்ற ஷோடசியைக் குறிக்கின்றது. அதாவது ம்ரு=5, த=8, ங்கம்=3. இந்த மூன்றின் ஸங்க்யைகளை கூட்டிருல் வருவது 16 என்ற ஷோடசீதான்.

சிசுர்வேத்தி என்பதால் சிசு என்ருல் குழந்தைகள். இதுகள் ம்ருதங்கத்தின் சப்தத்தைக் கேட்டுக்கொண்டே பாட்டில் லயித்து தூங்கிவிடும். சிசு என்ருல் ஸுப்ரஹ்மண்யன். ஸுப்ரஹ்மண்யன்தான் ஸங்கீத சாஸ்த்திரம் தெரிந்து ஸங்கீதத்தின் நுட்பத்தை அறிபவன்.

**பணீ:** பணீ என்ருல் பாம்பு. மகுடி ஊதும்போது அதைக் கேட்டுக் கொண்டே படத்தை எடுத்து ஆடிக்கொண்டிருக்கும். நன்ருக யாராவது புல்லாங்குழல் ஊதிருல் அந்த கானத்தில் லயித்துதான் ஆடுகிறது. மேலும் பணி என்ருல் பதஞ்ஜலி. சிதம்பரத்தில் நடராஜர் ஆடும்போது ஆனந்தமாக கேட்டுக்கொண்டு கானஸமுத்திரத்தில் மூழ்கிப்போகிறது. இதற்காகத்தான் சிதம்பரத்தில் வாஸம் செய்கிறது. க்ருஷ்ணர் நடராஜர் ஆடும்போது ஆனந்தமாக ம்ருதங்கம் வாசிக்கிருர். நடராஜனின் .வாஹனமான கிழட்டெருதுகூட (நந்திகேச்வரன்) ஸங்கீதத்தை கேட்டுக் கொண்டே இருக்கிறது.

# 17. ஸ்ரீபாஸ்கரராயரும் - திருவிடைமருதூரும் (ஸத்யமத்வைதம்)



ஸ்ரீபாஸ்கரராயர் அவர்கள் மத்யார்ஜுனத்திலே தங்கினதற்கு வேறு சில காரணங்களும் உண்டு.

ஆந்த்ரதேசத்தில் மல்லிகார்ஜுனம் என்றும், சோழதேசத்தில் மத்யார்ஜுனம் என்றும், பாண்ட்யதேசத்தில் புடார்ஜுனம் என்றும் உள்ள மூன்று க்ஷேத்ரங்களில் மத்யார்ஜுன க்ஷேத்ரம் ரொம்பவும் புராதனமானது. எல்லா க்ஷேத்ரங்களும் சிவசக்தி மயமாகத்தான் இருக்கின்றன என்றாலும் இந்த மத்யார்ஜுனத்தில் நன்றாகவே காணலாம்.

இதில் மத்யார்ஜுனம் என்ற திருவிடைமருதூரில் ஸ்வாமி பெயர் மத்யார்ஜுனர்- ஸ்ரீமஹாலிங்கம். அம்பாள் பெயர் ஸ்ரீப்ரஹ்மவித்யாம்பாள். இதல்லாமல் இந்த ஆலயத்தில் ஸ்ரீமூகாம்பிகா என்ற ஒரு ஸந்நிதி உண்டு. இந்த ஸந்நிதியில் ஓர் மேரு உள்ளது. அது விசேஷமானது. அந்த மேருவைப்போல் நான் வேறு எங்கும் பார்த்ததில்லை. அதன் சதுரச்ரத்தின் கீழ் ஸப்தபூமிகள் போல் ஏழு வலயங்கள் இருக்கின்றது.

இந்த ஆலயத்தில் மஹான்கள் ரொம்ப பேர் வந்து தர்சனம் செய்துகொண்டு அவ்விடத்திலேயே தங்கி இருந்திருக்கிறார்கள். தன் க்ருஹத்தில் கங்கையை வரவழைத்த ஸ்ரீஅய்யாவாள் என்னும் மஹான் அவ்விடத்திலேயே தங்கி இருந்து கடைசியில் சிவபதத்தை

அடைந்தார்கள். பக்கத்தில் கோவிந்தபுரம் என்னும் அக்ரஹாரத்தில் காமகோடிபீடம் ஆசார்ய பரம்பரையில் வந்த மஹான் ஸ்ரீபோதேந்த்ராள் காவேரிக் கரையில் ராம நாமத்தை ஜபித்துக்கொண்டே ஸமாதி யாயிருக்கிருர். இப்போதும் மஹான் ஸ்ரீபோதேந்த்ராள் ஸமாதியில் இருந்துகொண்டே **ராம் ராம்** என்று கூறுவதுபோல் சப்தம் அந்த ஸமாதியின் அருகில் படுத்திருக்கும் உத்தம பக்தர்களுக்கு இரவில் கேட்கிறது.

ஓர் ஸமயம் ஸ்ரீபகவத்பாதாள் சிவசக்தி மயமான அத்வைதத்தை ப்ரசாரம் செய்துகொண்டு வரும்போது



இந்த ஸ்ரீமஹாலிங்கத்தின் ஸந்நிதியில் அத்வைத ப்ரசாரம் செய்தார்கள். அப்போது சில பண்டிதர்கள் ஆக்ஷேபம் செய்தார்கள். அந்நேரம் ஆலயத்திலிருக்கும் ஸ்ரீப்ரஹ்ம வித்யாம்பாபதியான ஜ்யோதிர் மஹாலிங்கத்தின் வலதுபக்க கை மேலே கிளம்பி அபயம் கொடுப்பது போல் காட்டி **ஸத்யமத்வைதம், ஸத்யமத்வைதம் ஸத்யமத்வைதம்** என்று மும்முறை கூறியது என பெரியோர்கள் கூறுகிருர்கள். சென்ற சுமார் 10 ஆண்டுகளுக்கு முன் இந்த ஆலயத்திற்கு அருகில் ஒரு சங்கரமடத்தை பெரியவாள் **ஸ்ரீசந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** கட்டிஞர்கள். அந்த மடத்து வாசலில் ஓர் லிங்கத்தை வைத்து, அந்த லிங்கத்தின் வலது பக்கம் ஓர் கையை அபயம் கொடுப்பதுபோல் காட்டியுள்ளதை இன்றும் காணலாம். சிவசக்திமயம்தான் அத்வைதம் என்பதை இந்த காக்ஷி ஸ்பஷ்டமாக தெரிவிக்கிறது.

அம்பாள் ஸ்ரீப்ரஹ்மவித்யா, மூகாம்பிகையின் ஸந்நிதியில் விசேஷமான மேரு, (ஸ்ரீசக்ரம் சிவயோர்வபு:) ஜ்யோதிர் மயமான மஹாலிங்கம் இந்த மூன்றும் சிவசக்தி மயமான ப்ரஹ்மவித்யை தான்-அத்வைதம் என்பதை நன்ருகவே காட்டுகிறது. சிவசக்திமயமான அத்வைதத்தில் மிக பற்றுடையவரான ஸ்ரீபாஸ்கரராயர் அவர்கள் **ஸத்யமத்வைதம்** என்று கூறின ஸ்ரீமஹாலிங்கத்தின் ஸந்நியில் இருந்த கொண்டே தன் 96 வது வயதில் சிவசக்தி மயமாயும், பிறப்பிறப்பு இல்லாததாகவிருக்கும் பரமபதத்தை அடைந்தார்கள். இந்த ஸ்ரீபாஸ்கரராயர் என்ற மஹான் அனேக இடங்களில் சிவசக்திமயமான ஸ்ரீசக்ரத்தை ப்ரதிஷ்டை செய்ததாகவும் தெரிகிறது.

இதனுலெல்லாம் பஞ்சபூதாத்மகமான இந்த ப்ரபஞ்சம் சிவசக்தியாத்மகமாக விளங்குகிறது என உறுதியாகிறது.

சுபமஸ்து

உ

ஸ்ரீ வித்யாமஹா ஸௌபாக்ய பராம்பிகையின் அருளால் உலக நலன் ஒன்றையே கருதி ஸ்ரீ வித்யா மஹா ஸௌபாக்ய பராம்பிகா பீடம் சார்பாக நங்கநல்லூர் சிவில் ஏவியேஷன் காலனியில் குபேர கணபதி ஆலயம் அருகில் நடைபெற்ற 13வது நக்ஷத்ர மண்டல சண்டி யாகத்தில் எல்லா விதத்திலும் உதவி செய்த பக்தர்கள் அன்னையின் அருளால் எல்லா நலன்களும் பெற்று ஆனந்தமாகவும் ஆரோக்யமாகவும் வாழ எல்லாம் வல்ல அன்னையை ப்ரார்த்திக்கிறோம்.

கரூர் மாவட்டம் குளித்தலை மணப்பாரை வழியில் அமைந்திருக்கும் அய்யர் மலை கிரிவலப்பாதையில் ஸ்ரீபராசரஸ்வதி ஆலய திருப்பணி நடைபெற்று வருகிறது. வேதபாடசாலையும், வேத மந்திர, சாஸ்த மந்திர, ஆராய்ச்சி மையமும் நிறுவபடவுள்ளது. இவ்வுயர்வான திருப்பணியில் பங்குகொண்டு ஸ்ரீ வித்யா மஹா ஸௌபாக்ய பராசரஸ்வதி தேவியின் அருளை பெற்று சுகானந்த சுக வாழ்வு வாழ, அனுதினமும் அம்பிகையை ப்ராத்திபோமாக.

**ஸர்வமங்களங்களுடன்**
**ஸ்ரீ ப்ரணவானந்த ஸ்வாமிகள்.**

**ஆனந்தம் சுபம் மங்களம்**



சாந்தம் தாந்தம் தபோ நிஷ்டம்
சாந்தானந்த குருத்வஹம்

பஜாமி யமினாம் ச்ரேஷ்டம் அவதூத
மஹர்நிஸம்

ஸ்ரீ பராம்பிகா
ஆலய
திருப்பணியில்
பங்குபெறுங்கள்
அன்னையின்
அருள் பெறுங்கள் !

ஆனந்தம் சுபம் மங்களம்